இதுகளெயெல்லாம் சமனுக்கூட்டி துளசிச்சாற்றில் மூன்றுநாள் அரைத்து உருத்து பிரமாணமாத்திரை செய்து நிழலுணர்த்தலாய் உலர்த்தி அந்தசக்கு சாற்றில் ஒரு மாத்திரை உரைத்துக்கொடுக்கவும் இராத்திரியில் அடிக்கிற சுரங்கள் நாலாமுறைகாய்ச்சலும் தீரும்.

## குளிர்காய்ச்சலுக்கு சிதாராமபாணம்.

வெள்ளைப்பாஷாணம் பாகத்தனச்சாற்றில் ஒருநாள் அரைத்து மூன்றுநாள் தெயிர்வார்த்து அரைத்து மூன்று நாள் மிளகுத்தக்காளிச்சார் வாத்தரைத்து பாசிப்பயறுபிரமாணம் மாத்திரைச்சேர்த்து நிழலுணர்த்தலாய் உணர்த்தி பதனம்பண்ணவும் ஒருமாத்திரைசுக்குகஷாயத்தில் கொடுக்கவும் பாசிப்பயறுகஞ்சிகாய்ச்சிக் கொடுக்கவும் வாந்திகளும் அதுக்குபிரிதிசாதத்தில் கஞ்சிவார்த்து கொடுக்கவும் இந்தப்படிக்கு மூன்றுநாள் மாத்திரை கொடுக்கவும் குளிர்க்காய்ச்சல் தீரும்.

கோழிக்காரம் அரிதாரம் பூதபூச்சிச்சாரம் வாத்தரைத்து பாசிப்பயராவுமாத்திரைகள்செய்து நிழலுணர்த்தலாய்உலர்த்திவைக்கவும் ஒருமாத்திரை பூதபூச்சாற்றிலே உரைத்து மூன்றுநாள்கொடுக்கவும் குளிர்காய்ச்சல் தீரும் கஞ்சிகாய்ச்சிகொடுக்கவும்.

## இருணிவச்சிற கபாடமாத்திரைகள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சாதிலிங்கம் | ... | ... | மிளகு | ... | ... |
| சுக்கு | ... | ... | சாதிக்காய் | ... | ... |
| வெண்காரம் | ... | ... | சாதிபத்திரி | ... | ... |
| திப்பிலி | ... | ... | கிராம்பு | ... | ... |
| நற்பாலைவேர் | ... | ... | கழற்சிபருப்பு | ... | ... |
| நீர்முள்ளிவிரை | ... | ... | அதிவிடையம் | ... | ... |
| அட்டவாளிவிரை | ... | ... | இலவம்பிசினி | ... | ... |
| மாம்பிசினி | .. | ... | காசுகட்டி | ... | ... |
| விலாம்பிசினி | ... | ... | புளியம்விரைஒடு | ... | ... |
| ஆவாரம்வேர்பட்டை | | ... | வேப்பம்பிசின் | ... | ... |
| கரிவேலம்வேர்பட்டை | | ... | ஓமம் | ... | ... |
| கருஞ்சீரகம் | .. | ... | சீரகம் | ... | ... |

இவைகளை வகைக்கு இரண்டு விராகனிடையாக அதற்குச்சமனுக அபின் கூட்டி கற்பாலை இலைச்சாறம் விட்டு நாலுநாளரைத்து கற்பாலையிலை கஷாயம் வைத்தரைத்து வாழைப்பூச்சாறம் மூன்றுநாள் வார்த்தரைத்து ஊமத்தம்பூச்சாறம் விட்டு மூன்றுநாள் அரைத்து பயறு பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுணர்த்தி பதனம் பண்ணவும் பத்தியம் சாதமும் வென்னீருமாகக் கொடுக்கவும்.

## ஜன்னிசுரத்துக்கு மகாவயிரவாசம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாபி | ... | ... | இருபி | ... | ... |
| கெந்தகம் | ... | ... | நிருவிஷம் | ... | ... |
| வெண்காரம் | ... | ... | நவச்சாரம் | ... | ... |
| தாம்பிரபற்பம் | ... | ... | சலாசித்தி | ... | ... |
| சாதிலிங்கம் | ... | ... | கரியபவுழம் | ... | ... |
| தாளகம் | ... | ... | ஊசிக்காந்தம் | ... | ... |
| மனோசிலை | ... | ... | ஊமத்தம்விரை | ... | ... |
| வெள்ளைபாஷாணம் | | ... | சுக்கு | ... | ... |
| கெவுரிபாஷாணம் | | ... | திப்பிலி | ... | ... |
| அத்தம் | ... | ... | மிளகு | ... | ... |
| துருசு | ... | ... | சித்தரத்தை | ... | ... |
| அபிரேகம் | ... | ... | | | |

இது சமனுகக்கூட்டி ஊமத்தஇலைச் சாற்றினுல் பாகற்கனிச்சாற்றினுல் இஞ்சிச்சாற்றினுல் ஒவ்வொரு சாற்றினுல் மூன்று நாள் ஒன்பது நாளரைத்து எள்ளு பிரமாணம் மாத்திரைசெய்து நிழலுணர்த்தலாய் உலர்த்தி தேங்காய்க் குடுக்கையில் மாத்திரையை வைத்து தவசத்தில் ஒருமாதம் புதைத்து பதனம்பண்ணவும் ஞாயிறுவருஷத்துக்கு யிருக்கும் ஒரு மாத்திரை இஞ்சிச் சாற்றிலாவது சுக்கு சாற்றிலாவதுவரைத்துக்கொடுக்கவும் சன்னிசுரம் குளிர்காய்ச்சல் தீரும்.

## குளிர்காச்சலுக்கு ப்ரதாபருத்திரரசம்.

| | |
|---|---|
| வெள்ளைபாஷாணம் ... ... | காந்தம் ... ... |
| ரசம் .... ... | நவச்சாரம் |
| அரிதாரம் ... ... | கரியபவழம் ... ... |
| மனோசிலை ... .. | வெண்காரம் ... ... |
| துருசு .... ... | துத்தம் ... ... |

இதுகளை சமனெடை நிறுத்துக்கொண்டு ஊமத்தஞ்சாற்றில் மூன்றுநாளரைத்து பாகைத்தழைச் சாற்றில் மூன்றுநாளரைத்து துவரைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலுணர்த்தலாய் உலர்த்தி தேங்காய் குடுக்கையில் அடைத்து முப்பது நாளைக்குப் பிறகு தவசத்தில் புதைத்து யெடுக்கவும் ஒரு மாத்திரை இஞ்சி சாற்றிலாவது சுக்கு கியாழத்திலாவது கொடுக்கவும் குளிர்காய்ச்சல் நிற்கும் பத்தியம் உப்பில்லாமல் அரிசியுடனே பாசிப்பயறு கூட்டப் போட்டு கஞ்சிகாய்ச்சி கொடுக்கவும்.

## சகலசுரங்களுக்கு அழகியசொக்கன் குளிகைகள்.

| | |
|---|---|
| நாபி ... ... | துத்தம் ... ... |
| சாதிலிங்கம் ... ... | துருசு ... ... |
| அரிதாரம் ... ... | கடுகுரோகணி ... ... |
| கெவுரிபாஷாணம் ... | சுத்திசெய்த நேர்வாளம் ... |

இவைகளை சமனெடை நிறுத்து பாகையிலைச்சாற்றினாலேயும் இரிசிச் சாற்றினாலேயும் சகாதேவியிலைச் சாற்றினாலேயும் துளசிச்சாற்றினாலேயும் கையாந்தகரைச் சாற்றினாலேயும் இதுவகைக்கு மூன்றுநாளரைத்து கடுகுப்பிரமாணம் குளிகை செய்துக்கொண்டு நிழலுணர்த்தலாய் உலர்த்தி மிளகுபொடியுடனே ஒரு குளிகை கொடுத்தால் சீதசுரம் தீரும் பத்தியம் அரிசியுடனே பாசிப்பயறு போட்டு கஞ்சி

காய்ச்சி கொடுக்கவும் அனுபானம் விசேஷங்களாய் கொடுத்தால் சர்வ சுரங்களும் தீரும்.

## குழந்தைகள் சுரத்திற்கு சாத்திரபேதி.

| | | | |
|---|---|---|---|
| ஏலம் | ... | அதிமதுரம் | ... |
| கிராம்பு | ... | சுக்கு | ... |
| சாத்திரபேதி | ... | மிளகு | ... |
| கோரோசனை | ... | ஓமம் | ... |
| செங்கழுநீர்க்கோஷ்டம் | ... | இலவங்கப்பூ | ... |
| திப்பிலி | ... | நன்னாரிவேர் | ... |
| கல்மதம் | ... | சிறுபீளைவேர் | ... |
| கல்னுரு | ... | குமிழம்பட்டை | ... |
| லவங்கப்பட்டை | ... | பெருமரத்துப்பட்டை | ... |

இவைகளை சமனுகக் கூட்டி முலைப்பால் வார்த்தரைத்து பாசிப்பயறளவு மாத்திரைசெய்து நிழலிலாக்கவாய் உலர்த்தி ஒரு மாத்திரை முலைப்பாலில் அரைத்துக்கொடுக்க குழந்தைகள் சுரம் தீரும்.

## குழந்தைகளுக்கு பேதிக்கு.

கால்படி விளக்கெண்ணெயில் கற்றாழைச்சோறு எலுமிச்சங்காயளவு இரண்டு கடுக்காயும் பொடிசெய்துபோட்டு மூன்றுமிருள்ளியும் கட்டிப்போட்டு காய்ச்சி ஆறினபிறகு குழந்தைக்கு கொடுக்கவும் பத்தியம் கஞ்சிசாதம் கொடுக்கவும்.

## சுரத்துக்கு ஆனந்த பைரவன்.

| | | | |
|---|---|---|---|
| சாதிலிங்கம் விராகனி | ௨ | மனோசிலை விராகனி | ௨ |
| நாவி | ௨ | வெண்காரம் | ௨ |
| கெந்தகம் | ௨ | சுக்கு | ௫ |
| மிளகு | ௫ | திப்பிலி | ௫ |

இவைகளெல்லாம் கூட்டி எலுமிச்சம்பழச்சார்விட்டு மூன்று ஜாமம் அரைத்து மிளகுகுன்றி பிரமாணம் உருண்

டைசெய்து திரிகடுகு கியாழத்திலிடவும் இப்படி மூன்று நாளிடவும் சர்வசுரமும் தீரும்.

## விஷசுரத்துக்கு குளிகை.

கெந்தகம் பச்சை நாவி இரதம் மிளகு சேர்வாளம் சுத்திசெய்ததும் கூட்டி ஆவிரையிலைப்பருப்பும் சேர்ச் சமனாகக்கூட்டி இஞ்சிச்சாரிட்டரைத்து உழுந்து பிரமாணம் உருண்டையாய் குளிகை செய்து இஞ்சிச்சாற்றில் சாப்பிட விஷசுரம் தீரும்.

## சன்னிக்கு ரத்தினாதிக்குளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெண்காரம் | ... | ... | கெந்தகம் | ... | ... |
| இரசம் | ... | ... | திரிகடுகு | ... | ... |
| இந்துப்பு | ... | ... | | | |

ஒவ்வொன்றுகளஞ்சு சேர்வாளம் இரண்டுகளஞ்சு இது கவி நாலுகளஞ்சு சேரக்கூட்டி முலைப்பால்விட்டு ஒருஜாமமரைத்து உழுந்துபிரமாணம் உருண்டைசெய்து ஒரு உருண்டை இஞ்சிச்சாற்றிலிடவும் இன்னொரு உருண்டை மகேந்திரியிலை எலுமிச்சம் பழச்சாறுவிட் டரைத்து பயறுபிரமாணம் உருண்டையாக குளிகைசெய்து ஒருகுளிகை இஞ்சிச்சாற்றிலிடவும்.

## சுரத்துக்கு ஏலாதிகுளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | ... | ... | இரும்பு | ... | ... |
| நெல்லிபருப்பு | ... | ... | காட்டெருமைப்பால் | | ... |
| சீரகம் | ... | ... | முந்திரிப்பழம் | ... | ... |
| மதுரம் | ... | ... | சந்தனம் | ... | ... |
| கொத்துமல்லி | ... | ... | இருவேலிவேர் | ... | ... |
| சுக்கு | ... | ... | | | |

இவைகளைச் சமனாகக்கூட்டி தயிர்தண்ணீர்விட்டரைத்து ஒருகளஞ்சுசர்க்கரை கூட்டிக்கொடுக்கவும் தாகபிரமை தீரும்.

## சீதசுரத்திற்கு குளிகை.

| | | |
|---|---|---|
| வெள்ளைபாஷாணம் | கழஞ்சு | ௧ |
| சூதம் | ,, | ௨ |
| துருசு | ,, | ௩ |

இவைகளை குழிக்கல்லிலிட்டு ஒரு சாமம் விடாமல் ஊமத்தஞ் சாறுவிட்டு மிளகு பிரமாணம் உருண்டைபண்ணிகுளிர்வருகிற முறையிலே விடிய இரண்டு நாழிகைபொழுது ஒருஉருண்டை பசுவின்பாலில் கொடுக்கத் தீரும்.

## சுரத்திற்கு மாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காவி | விராகனிடை | ௮ | சூதகம் | விராகனிடை | ௨ |
| கெந்தகம் | ... | ௬ | துருசு | ... | ௨ |
| அரிதாரம் | ... | ௨ | வாளம் | ... | ௨ |

இவைகளுக்கு சரிபாகம் தாம்பூரபற்பம் கூட்டி மத்தித்து குப்பமேனி துளசி தும்பை கையாந்தகரை இந்த நாலு வகை யிலைச்சாறுவிட்டு மத்தித்து இரண்டு சாமம் அரைத்து பாணியில் வைத்துக்கொண்டு காலையில் பணவிடை தேனில் இஞ்சிச்சாற்றில் வெல்லத்திலிட தீரும்விஷசுரம் தாபசுரம் சுவாசகாசம் தீரும்.

## வாலசஞ்சீவி மாத்திரை.

சுக்குதிப்பிலி கிராம்பு கருஞ்சீரகம் மிளகு சாதிக்காய் சாபத்திரி ஏலம் வாளம் சாதிலிங்கம் சரிகொண்டு எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு சாமம் அரைத்து பயறளவு மாத்திரைதிரட்டிவைத்துக்கொண்டு கடுகுரோகணி கடுக்காய் சுக்குகியாழத்திலிட சன்னி தீரும் பிள்ளைகளுக்குப்பாலில்கொடுக்கவும் பெரியவர்களுக்கு இரண்டுமாத்திரையும் குழந்தைகளுக்கு ஒரு மாத்திரையும் கொடுக்கலாம்.

## வேறு விதம்.

பிள்ளை பச்சிலைபோல் கழிந்தால் எலம் சாத்திரபேதி அதிமதுரம் இதுகள் வகை ஒன்றுக்கு அரை வராகனிடை வாங்கி பழந்தண்ணீர்விட்டரைத்து மூன்று நாள் காலமே கொடுக்கத்தீரும்.

## பிள்ளைகளுக்கு சுரத்திற்கு மாத்திரை.

சீரகம் கருஞ்சீரகம் வசம்பு ஓமம் சுக்கு கிராம்பு வசுவாசி மிளகு சாதிக்காய் திப்பிலிமூண்டு தான்றிக்காய் செவ்விமுள்ளி கடுகு ரோவாளம் இதுகள் சமனிடை கொண்டு இஞ்சிச்சாற்றிலரைத்து மிளகு பிரமாணம் மாத்திரை திரட்டி நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு ஒருமாத்திரை முலைப்பாலில்கொடுக்க பிள்ளைகள்மாந்தம் சுரம் சகலமுந்தீரும்

## பெருவாரி காய்ச்சலுக்கு மாத்திரை.

ஆடுதின்னாப்பாளை வேரும் லவங்கப்பட்டை தூளும் சமனிடை கூட்டி எலுமிச்சம்பழம் சாறுவிட்டு அரைத்து குண்டுமணி பிரமாணம் உருண்டைபண்ணிவைத்துக்கொண்டு புருஷருக்கு ஸ்திரிகளின் சிறுநீரிலும் ஸ்திரிகளுக்கு புருஷர்கள் சிறுநீரிலும் இப்படி மூன்றுநாளிடவும் வெந்நீரில் மூன்றுநாளிடவும் இதற்கு தீரும் வியாதி பெருவாரி காய்ச்சல் அவசரக்காய்ச்சல் விஷசுரம் விடாதசுரம் ஒட்டுசுரம் குளிர்சுரம் இதுகள் தீரும்.

## விஷபேதிக்கு மாத்திரை.

| | | வராகனிடை |
|---|---|---|
| எட்டிவேர் வடக்கேபோகிறவேர் | ... | ௨ |
| தலைச்சுருளிவேர் | ... ... | ௫ |
| அவிஞ்சிவேர்பட்டை | ... ... | ௫ |

கடை சாக்கு திப்பிலி சுக்கு மிளகு ஓமம் பெருங்காயம் வெள்ளை வெங்காயம்வகை ஒன்றுக்கு ஒரு விராகனிடை இதுகளெல்லாம் கூட்டி எலுமிச்சம்பழச்சாறுவிட்டு ஒரு சாமமரைத்து சுண்டைக்காய்பிரமாணம் பண்ணி நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் விஷபேதி கண்டவுடனே ஒயின் ஒருகிளாசு அதிலுரைத்துக்கொடுக்கவும் சீமைக்காடியில் உரைத்துக் கொடுக்கவும் ஓமக் கியாழத்தில் கொடுக்கவும் கடும்பத்தியம் எட்டிவேரை சிறுகநறுக்கி பசுவின் கோமயத்தில் கொதிக்கவைத்து யெடுத்தால் சுத்தியாகும் அதைகாயவைத்து அரைக்கவும்.

## கோரோசனை மாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | விராகனி | க | வெட்டிவேர் | விராகனி | க |
| கோஷ்டம் | ... | க | விலாமிச்சைவேர் | ... | க |
| ஏலம் | ... | க | சமுத்திரபச்சை | ... | க |
| அதிமதுரம் | ... | க | செண்பகப்பூ | ... | க |
| சாத்திரபேதி | ... | க | | | |

இதுகளெல்லாம் முலைப்பால்விட்டரைத்து கடலை பிரமாணம் உருண்டைபண்ணிவைத்துக்கொண்டு சகலமான மாந்தம் கணைத்துக்கும் முலைப்பாலிலிடவும் பெரிய மனிதருக்கு குடல்படுவன் சுரங்களுக்கு முலைப்பாலிலிடவும் சகல வியாதிக்கும் அனுபானமான கியாழத்திலிடவும் கடும்பத்தியம்.

## சின்னயேலாதி மாத்திரை.

ஏலம் லவங்கப்பட்டை சீரகம் கோஷ்டம் அதிமதுரம் முந்திரிகைப்பழம் கிராம்பு சாதிக்காய் வசுவாசி ஓரிலைத்தாமரை நன்னாரிவேர் பற்பாடகம் கோரோசனை இதுகள் வகை ஒன்றுக்கு விராகனிடை ஒன்று சேர்த்து இளநீர் விட்டு அரைத்து குண்டுமணிபிரமாணம் உருண்டை

பண்ணி வைத்துக்கொண்டு சுரத்துக்கு அனுபானங்களிட வும் மேகக்குட்டுக்கு சீரக கியாழத்திலிடவும் பத்தியம் மச்சம் புளி ஆகாது.

## சுரத்துக்கு மாத்திரை.

| | |
|---|---|
| சுண்ணாம்புகல்லில் சுத்திசெய்த தாளகம் விராகனிடை | க |
| சுத்திசெய்த லிங்கம் ... ... ... | க |
| சுத்திசெய்த நேர்வாளம் ... ... ... | க |
| கடுகுரோகணி ... ... ... | க |
| நொச்சிக்கொழுந்து ... ... ... | க |

இந்த ஐந்து சரக்குகளையும் கல்வத்தில் பொடித்துக் கொண்டு பசும்பால் விட்டரைத்து மிளகு பிரமாணம் உருண்டைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு சுக்கு கியாழத்தில்தோய்பலத்துக் கேற்றுப்போல்கொடுத்தால் திரும் இதைபேதிக்கு கொடுக்கவென்றால் மாத்திரை சு- பொடிசெய்து வாயிற்போட்டு ஒருமுணர்க்கம் சாப்பிட வும்.

## பாலபூபதி மாத்திரை.

| | | | |
|---|---|---|---|
| வாளம் விராகனிடை | க | கெந்தகம் விராகனிடை | ௩ |
| சுக்கு ... ... | உ | ரூதம் ... | பஹ |
| வெண்காரம் ... ... | வ | | |

இவைகளைவென்னீரில் ௪ சாமம் அல்லது ௫ சாமம் அரைத்து குன்றிமணிப்பிரமாணம்செய்து வாழைப்பழத் திலாவது பனைவெட்டிலாவது அதிமதுரம் கியாழத்திலா வது சாப்பிடவும்

## வாலசஞ்சீவிகுளிகை.

சுக்கு திப்பிலி மிளகு லிங்கம் வெண்காரம் கிராம்பு ஓமம் இந்த எழு சரக்கையும் சமனிடை வாங்கி கல்வத்தி

விட்டு பழச்சாற்றால் நன்றாயாட்டி உளுந்து பிரமாணம் குகைபண்ணி நிழலிலுலர்த்தி சுரங்களுக்கு நாளிசாற்றி லாவது சன்னிசுரமாயிருந்தால் முலைப்பாலில் மூன்றுநாள் கொடுக்கவும் ஜலதோஷமாயிருந்தால் வெற்றிலையில்கொடு த்து மென்றுதின்ன தீரும்.

## பஞ்சரத்தினகுளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இரசகர்ப்பூரம் | விராகனி | க | சவ்வீரம் | விராகனி | உ |
| இரசம் | ... | க | சுத்திசெய்தபவாளம் | | உ |
| சாதிலிங்கம் | ... | க | | | |

இவைகளை கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாரிவிட் டரைத்து திரண்டு வருகிற பதத்தில் கொத்துமல்லி பிர மாணம் உருண்டைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொ ண்டு முலைப்பாலிலாவது வெந்நீரிலாவது தேனிலாவது இரண்டுமாத்திரை மூன்றுநாளைக்கு கொடுக்கவும் சன்னி சுரம் மாந்தம் வீக்கம் சுழிகணை கபம் வாதம் வலிகள் தீரும் கடும் பத்தியம்.

இனி இரண்டாங்காண்டத்தில்
அனேகமுறைகள் விளக்கப்படும்.

மாத்திரைவகைப்
படலம் முற்றிற்று.

# குழந்தைவாகடம்.

## பிரமமுனி அநுபோகம்.

### மாந்தரோகம் வருகிற விதம்.

எருமைப்பால், நெய், கதலிதேங்காய், இளநீர், கடலை, வெல்லம், புளித்தமோர், மாங்கிஷம், கனிகள், மலைத்துவரை, உளுந்து, மொச்சை; புளியங்கொட்டை, உளுவை, வாளைமீன், கெண்டை, கிழங்குவகைகள் முதலியவை தாயார் அருந்தி அம்முலைப்பாலை சேய்க்கு ஊட்டினதினால் மாந்தரோகம் வந்ததென்றறிக.

### ௨௧. மாந்தரோகம் வகை.

௧ வாதமாந்தம்
௨ பித்தமாந்தம்
௩ செறிமாந்தம்
௪ சேஷ்மமாந்தம்
௫ விஷமாந்தம்
௬ வாலைமாந்தம்
௭ சுரமாந்தம்
௮ நீர்மாந்தம்
௯ செரியாமாந்தம்
௧௦ கட்டுமாந்தம்
௧௧ பால்மாந்தம்
௧௨ துலையமாந்தம்
௧௩ எரிமாந்தம்
௧௪ தலைமாந்தம்
௧௫ கனமாந்தம்
௧௬ வலிப்புமாந்தம்
௧௭ சுழிமாந்தம்
௧௮ முக்குமாந்தம்
௧௯ ஜன்னியமாந்தம்
௨௦ ஊதமாந்தம்
௨௧ விக்கமாந்தம்

ஆக இருபத்தொன்றுகவழங்கியதென்றறிக.

### மாந்தரோகங்களின் குணம்.

குழந்தை கனமாயிருக்கும், பிரண்டையைப்போல் சால்பின்னும், கண்கள் சிவக்கும், உடம்பில் நோய்காட்டும், கைபில்தங்காது, அழுகுரல் தாழ்ந்திருக்கும், கண் குழிந்தி

ருக்கும் வயறுகிழியும், வாய்நாறும், கைகால்கள் குளிர்கா ணும், பால்உண்ணாது, வாந்திபண்ணும், வாய், நாக்கு, உலர்ந்துகாணும், மயக்கமுண்டாம், பசியில்லாமல் காமவிகாரங்கொண்டவனைப்போல் சோர்ந்துகிடக்கும், சிதமும் மலமுங் கலந்துபோகும் கெட்டபால் போலும், தெளிந்தகண்ணீர்போலும் வயறுகழியும், உள்ளங்கைகால் குளிர்ந்துகாணும், வெதும்பும், கண்குழலும், தேகம்வியர்க்கும், கண்ணாடியைப்போல் முகமினுமினுப்பாயிருக்கும், மற்ற குணங்களிற் இரண்டாங்காண்டத்தில் முறையிடுவோமாக.

## குழந்தைகளுக்கு அவுஷதங்கள்.

### மாந்தத்துக்கு பச்சிலைச்சாறு.

| | |
|---|---|
| நொச்சி | நுணா |
| பொடுதலை | உத்தாமணி |

இன்னான்கும் சமன்கொண்டிடித்துச் சாறு பிழிந்து சற்று அடுப்பில்வைத்து காலாழாக்கு விதம் மூன்றுநாள் காலையில் கொடுக்கவும், அன்றி மேற்கூறியவைகளைப்போல் நாடோறும் வெவ்வேறு செய்யவும்.

### மாந்தத்துக்கு குழம்பு.

| | | |
|---|---|---|
| வெற்றிலைக்காம்பு | ௧௧ | உள்ளி இரண்டிடை |
| வசம்பு ஐந்திடை | | திப்பிலி ஒருநிடை |

இவைகளைவெதுப்பி அரைத்து குழந்தைகளுக்கு தக்கபடி வெந்நீரிற்கலந்தியவும்.

### மாந்தத்துக்கு குடிநீர்.

| | |
|---|---|
| ஓமம் | மிளகு |
| உள்ளி | திப்பிலி |

இவைகளைப் பொடித்து துணியில் முட்டை கட்டி நாழி நீரில் போட்டு எட்டி லொன்ருய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

### மாந்தத்துக்குக் கியாழம்.

நுணா
நொச்சில்
உத்தாமணி
கெச்சைக்காய்வேர்

இவைகளைவகைக்கு பிடி ஒன்ருக சட்டியில் கருக்கி நாழி நீர்விட்டு அடுப்பேற்றி

ஓமம்
வசம்பு
சுக்கு
மிளகு
பொடுதலைக்காய்
திப்பிலி

இவைகளை வகைக்கு ஒரு விராகனிடை கொண்டு நல்லெண்ணெயிற் சிவக்கவறுத்து பொட்டளமாய்க்கட்டி ஷை நீரில்போட்டு காய்ச்சி ஒரு சங்கு கொடுக்கவும்.

### மாந்தத்துக்கு குளிகை.

வாய்விளங்கம், சுட்ட ஆமை ஓடு, மிளகு, பொடுதலைக்காய், வசம்பு, திப்பிலி, கழல்பருப்பு, இவைகளைச் சமன் கொண்டு பொடுதலைச் சாற்ருலாட்டிப் பட்டாணிப்பிரமாணம் குளிகை செய்யவும்.

### அநுபானம்.

ஷை குளிகை ஒன்றைக் கண்டங்கத்திரிக் கியாழத்தில் மாந்தமும், உத்தாமணிக் கியாழத்தில் வயிர் பொருமலும், வாந்தியும், ஓமக் கியாழத்தில் கழிச்சலும், தேனில் வாத சிதளமும், முலைப்பாலில் மூக்குமாந்தமும், இஞ்சிச் சாற்றில் மயக்கமும் நீங்கும்.

## உளைமாந்தம், உட்சுரம், எலும்புரிக்கிக்குமருந்து.

புல்லுருவியும், கருப்புக் கட்டியும். எண்ணெயில் அறைத்து சுண்டைக்காயளவு கொடுக்கவும்.

## சுழிகணம், உப்பிசம், கோழைக்கட்டு, இளைப்புக்கு மருந்து.

குப்பைமேனிச் சாற்றால் உப்பை அறைத்து வேப்பெண்ணெயில் மத்தித்து இரண்டுகாசெடை ௩ - நாள் கொடுக்கவும்.

## மாந்ததோஷம் வலிப்பு மலக்கட்டுக்கு மருந்து.

நல்வேளையிலே, வசம்பு, வள்ளியிலே சமன் கொண்டு இடித்து வெதுப்பிப்பிழிந்து குழந்தைகளுக்குத் தக்கபடி வ - உ - ஒ - க - சங்குவீதம் கொடுக்கவும்.

## மாந்தம்வயறுவலி, செறியாமாந்தத்துக்குமருந்து.

உத்தாமணிச்சாறு ஆழாக்கில் வசம்பு, திரிகடுகு, கோரோசனை இவைகள்வகைக்கு விராகனிடை உ, உத்தாமணிக்கொழுந்துவிராகனிடை ச, ஒன்றாய்சேர்த்தறைத்து தக்கபடி கொடுக்கவும்.

## மாந்தவலிப்பு-காக்கைவலிப்புக்கு மருந்து.

| | | |
|---|---|---|
| கொடிவேலிவேர்பட்டை | விராகனிடை | ௩ |
| சங்கன்வேர்த்தோல் | ... ... ... | ௩ |
| எருக்கன்வேர்பட்டை | ... ... ... | ௩ |

இவைகளை வென்னீர்விட்டு நன்றாக அறைத்து கலக்கி வடிகட்டி குங்குமப்பூ ஒரு விராகனிடை போட்டு தக்கபடி கொடுக்கவும்.

## மாந்தவீக்கம், விஷவீக்கம், சுரம், நீர்க்கட்டுக்குக் கியாழம்.

| | | | |
|---|---|---|---|
| பூவரசன்பழுப்பு விராக | ௫ | வரமுள்ளி விராகனி | ௫ |
| சங்கன்வேர்ப்பட்டை... | ௫ | முருங்கையிர்க்கு ... | ௫ |
| சிந்திற்கொடி ... | ௫ | நீர்முள்ளிவேர் ... | ௫ |
| துளசி ... ... | ௫ | சார்வளைவேர் ... | ௫ |
| பிரமியிலை ... ... | ௫ | மருள்கிழங்கு ... | ௫ |
| தூதுவேளை ... | ௫ | சிறுகுறிஞ்சான்வேர் | ௫ |
| சத்திசாரணைவேர் ... | ௫ | கருஞ்சீரகம் .... | ௫ |
| சுக்கு ... ... | ௫ | | |

இவைகளை ஒருபடி ஜலம்விட்டு ஆழாக்கு ஜலமாகக் காய்ச்சி ௩-நாள் ஆறுவேளை கொடுக்கலாம்.

## உப்பல் மாந்தத்துக்குமருந்து.

குப்பைமேனியும் உப்புங்கசக்கி சார்பிழிந்து இரண்டு காசெடைவீதம் ௩-நாள் கொடுக்கவும்.

## அமூர்தாதிக் குளிகை.

அதிமதுரம்
சண்பகப்பூ
ஏலம்
கோரோசனை
சாத்திரபேதி
வெட்டிவேர்
கோஷ்டம்
மாசிப்பச்சை
விலாமிச்சம்வேர்

இவைகளைச் சமன்கொண்டு ஆதண்டச்சாறுவிட்டு ஒருஜாமமாட்டி குன்றியளவு உருண்டைசெய்து ஒரு உருண்டையை முலைப்பாலில்தாக்க நீர்க்கண்மாந்தம் சி, குடப் படுவன், நீர்ப்பாடு, கற்பப்பாடு, நாவரட்சி, சுரம், சூலை, எரிவு, வெப்புதோஷம் முதலியவை நீங்கும்.

## மூக்கல்வயிற்றுக்கடுப்புக்கு.

பரித்திப்பிஞ்சி
ஜாதிக்காய்
கிராம்பு
இலந்தைவித்து
விடையம்
அரத்தை
ஓமம்

இவைகளைச்சமன்கொண்டு பொன்வறுப்பாக்கிச் சூரணித்து திரிகடிப்பிரமாணம் கன்னிடையன்தயிரில் கலந்து கொடுக்கவும்.

## சீதக்கடுப்புக்கு மருந்து.

பருத்திவித்து, ஜாதிக்காய், நன்னாரிவேர், வட்டத்திப்பிலி, சீரகம், கிராம்பு, இவைகளைச்சமன்கொண்டு பொன்வறுப்பாக்கிச் சூரணித்துச் சிறுபுள்ளடிச் சாற்றிலாட்டி பட்டாணியளவு கொடுக்கவும்.

## அதிமதுரமாத்திரை.

மதுரம்
விடையம்
ஜாதிக்காய்
மாதளம்பூ
சீரகம்

இவைகளைச்சமன்கொண்டு பொன்வறுப்பாக்கிச் சூரணித்து மாதளம்பழச்சார், அல்லது புளியாரைச் சாற்றில் ஒரு ஜாமமாட்டி தூதளங்காய் பிரமாணம் குளிகைசெய்து கொடுக்க வெப்புகழிச்சல் தீரும்.

## அமிர்த சஞ்சீவிகுளிகை.

சாத்திரபேதி
கோஷ்டம்
ஏலம்
இலவங்கம்
சந்தனம்
கடுகு
ரோகணி
இலுப்பைப்பூ

நன்னாரி
விலாமிச்சு
வெட்டிவேர்
திப்பிலி
மதுரம்
கோரைக்கிழங்கு
முந்திரிகை
பேரீச்சு

இவைகளைச்சமன்கொண்டு கருப்பஞ்சாற்றிலாட்டிக் கடலைப்பிரமாணம் குளிகைசெய்து முலைப்பால் வெந்நீரில் கொடுக்க அஷ்டகணங்கள் சுரம் தாகம் முதலியவைகள் நீங்கும்.

## பேதிக்கு அமிர்த சஞ்சீவிலிங்கக்குழம்பு.

| | | | |
|---|---|---|---|
| ஜாதிலிங்கம் விராகனிடை | ௨ | ஆமணக்குவித்து விராக | ௪ |
| வெண்காரம் .. | ௨ | வாளம் .. | ௬ |

இவைகளைநன்றாயாட்டி குன்றியளவு உருண்டைசெய்து குளிர்ந்த நீரில்தாக்க பேதியாகும், வெந்நீரில் கொடுக்கபேதிகட்டும், வாதம் குன்மம், கரப்பான் முதலியவைகள் போகும், அன்றி குழந்தைகளுக்குச் சொல்லும் அவுஷதங்களையெல்லாம் இந்நூலிற் கூறியவாறுபோல் சுத்திசெய்துக்கொள்ளவும்.

## பூபதிமாத்திரை.

சந்தனம்
நன்னாரி
புளியன்வித்து ஓடு
சிறுகீரை
ஜாதிக்காய்
ஜாதிபத்திரி
கிப்பிலி
இருவாட்சி
ஏலம்
உருத்திராட்சம்
கோரோசனை
சாத்திரபேதி
கோரைக்கிழங்கு
ஓரிலைத்தாமரை
நாயுருவி
வல்லாரை
செண்பகம்
கல்நார்
நற்சீரகம்
கருஞ்சீரகம்
இலவங்கப்பட்டை
பொன்னாங்கண்ணிவேர்
குப்பைமேனிவேர்

இவைகளைச்சமன்கொண்டு சூரணித்து வல்லாரைச் சாறும், காணிச்சாறும் சமன்கொண்டு ஷை சரக்குகளை நன்றாயாட்டி தேத்தான்வித்தளவு குளிகைசெய்து தக்க அநுபானங்களாலீய அட்டகணம் மாந்தம் பொருமல் முத லியவை நீங்கும்.

## பேதிபூபதிமாத்திரை.

இரசம், சுக்கு, வெண்காரம், கெந்தி வகைக்கு பலம்-வ நேர்வாளம் பலம்-க இவைகளைக்குளிர்ந்தநீரிலாட்டிப் பனி ப்பயரளவு குளிகைசெய்து குளிர்ந்த நீரில் தாக்க, பேதி யாகும், வெந்நீரில் கொடுக்க பேதிகட்டும், ஊது மாந்தம், பொருமல், வாதம் முதலியவை போகும்.

## ஏலாதிமாத்திரை.

| | |
|---|---|
| ஏலம் | மாஞ்சில் |
| மாசிக்காய் | சீரகம் |
| திப்பிலி | கருஞ்சீரகம் |
| கோரோசனை | அக்கிராகாரம் |
| கோஷ்டம் | |

இவைகள்வகைக்கு பலம்-வ-பொன்வறுப்பாக்கிச்சூர ணித்துமுலைப்பாலால் உ ஜாமமறைத்து கடலைப்பிரமாணம் குளிகைசெய்து முலைப்பாலில் கொடுக்க கணக்காய்ச்சல் நீங்கும்.

## கட்டுவாதிமாத்திரை.

| | |
|---|---|
| ஜாதிக்காய் | விடயம் |
| ஜாதிபத்திரி | புளியாரை |
| இலவங்கம் | காட்டாத்தி |
| ஏலம் | அபினி |
| மதுரம் | கஞ்சா |

குராசனிஓமம்
கோரைக்கிழங்கு
வெந்தயம்
சீரகம்
சிறுநாகப்பூ
மாதளம்பிஞ்சி
வாழைப்பூ

இவைகள் வகைக்கு பலம்.வ கொண்டிடித்துச் சூரணித்து ஆவின்பாலில் பிட்டவைத்து வாழைப்பூச்சாற்றிலாவது மாதளம்பழச்சாற்றிலாவதுஆட்டி மிளகுப்பிரமாணம் குளிகைசெய்து சர்க்கரையில்தாக்க பேதிகட்டும்

## கற்பூராதிமாத்திரை.

பச்சைகற்பூரம்
கெந்தி
இந்துப்பு
லவங்கம்
ஜாதிக்காய்
ஜாதிபத்திரி

இவைகளைவகைக்கு கழஞ்சி ௧ நிம்பழச்சாற்றி லாட்டி உளுந்தளவு குளிகைசெய்து இஞ்சிச்சுரசம், சர்க்கரை, சுக்கில் குளிகை ஒன்றைக்கொடுக்க மாந்திய சம்பந்தமாகிய சகல சுரங்களும் விட்டோடிப்போம்.

## கோடாசுழிமாத்திரை.

கோரோசனை விராகனிடை ௨
கடுகுரோணி ,, ௧
சேர்வாளம் விராகனிடை ௧

இவைகளை முலைப்பாலாலாட்டிப்பயறளவு குளிகைசெய்து குளிகை ஒன்றை இஞ்சிச்சாற்றில்விட வாதசுரமும், முலைப்பாலில் பித்தசுரமும், ஆடாதோடை கண்டங்கத்திரி கியாழத்திலிட சிலேற்பனசுரமும் தூதுவளைப்பிட்டவியலில் சன்னிசுரமும் நீங்கும்.

## கோரோசனைமாத்திரை.

மாசிக்காய் விராகனிடை ௨
திப்பிலி ,, ௨
கோஷ்டம் ,, ௨
கருஞ்சீரகம் ,, ௨

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அக்கிராகாரம் | விராக | உ | கோரோசனை | ,, | உ |
| அரத்தை | ,, | உ | | | |

இவைகளை முலைப்பாலால் ஒருஜாமமாட்டிப் பயறள வு குளிகைசெய்து பாவையர்பாலால் குளிகை ஒன்றைநிட் ட மாந்தகணம், ஜன்னி, பொருமல், சீதளம் முதலியவை போம்.

## சஞ்சீவிகுளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாபி | கழஞ்சி | க | சுக்கு | கழஞ்சி | க |
| கருநாபி | ... | க | தான்றிக்காய் | ... | க |
| வாலரசம் | ... | க | மிளகு | ... | க |
| கெந்தி | ... | க | திப்பிலி | ... | க |
| வெண்காரம் | ... | க | வாளம் | ... | ரு |

இவைகளைக் கையாந்தகரைச்சாற்றால் நாளொன்று க்கு ஒருஜாமமாக எ-நாள் ஆட்டிகுன்றியளவு உருண்டை செய்து குளிகை ஒன்றை ஜாதிக்காய் சூரணத்தில் தாக்க மூலவாய்வும், சிறுநீரில்பற்பல வாய்வுகளும், எலுமிச்சம் பழச்சாற்றில் விஷங்களும், நொச்சிச்சாற்றில் மூலம், வலி குன்மம், முருங்கப்பட்டைச்சாற்றில் சூலைரோகமும், வெ ண்மரிப்பாலில் க்ஷயரோகங்களும், மருதான்றிச்சாற்றில் ஐவகைப்பிரமியமும், விளக்கெண்ணெயில் மலச்சிக்கலும் சிந்தில்சாற்றிலிட எரிகுன்மமும் நீங்கும்.

## விரோசனசண்பகப்பூமாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | பலம் | வ | கடுகுரோகணி | பலம் | வ |
| இலவங்கம் | ,, | வ | சண்பகப்பூ | ,, | க |
| கோஷ்டம் | ,, | வ | வாளம் | ,, | உ |

இவைகளை வெந்நீர்விட்டரைத்து மிளகளவு குளிகை செய்து தேன், சுக்குக்கியாழத்திலிட பேதியாகும் வசம் பைச்சுட்டுக்கொடுக்க பேதிகட்டும்

## கஸ்தூரிமாத்திரை.

| | | | |
|---|---|---|---|
| கஸ்தூரி விராகனிடை | க | கோரோசனை விராக. | ந |
| குங்குமப்பூ ,, | உ | | |

இவைகளை முலைப்பாலாலாட்டி குன்றியெடை குளிகைசெய்து தக்கஅனுபானங்களாலிட தோஷசன்னி, மாந்தசன்னி, பித்தசுரம், வாந்தி முதலியவை நீங்கும்.

## குருமாத்திரை.

| | | | |
|---|---|---|---|
| சண்பகப்பூ கழஞ்சி | க | சாத்திரபேதி ... | க |
| விலாமிஞ்சம்வேர்... | க | மதுரம் ... | க |
| கோஷ்டம் ... | க | வெட்டிவேர் ... | க |
| ஏலம் ... | க | மாசிப்பச்சை ... | க |
| கோரோஜனை ... | க | | |

இவைகளை வெட்டிவேர்கியாழத்தில் ஒருஜாமமாட்டி குன்றியளவு உருண்டைசெய்து மாத்திரை ஒன்றை முலைப்பாலிலாவது இழைத்துக்கொடுக்க மாந்தம் முதலியவைகள் நீங்கும்.

## பூரமாத்திரை.

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்தபூரம் பலம் | ௨ | வசம்பு பலம் | வ |
| இலவங்கம் ... | வ | மாசி ... | வ |
| ஏலம் ... | வ | அதிவிடயம் ... | வ |

இவைகளை மாசிப்பத்திரிவேரின் சாற்றால் ஒரு ஜாமமும், விஷ்ணுகரந்தைசாற்றால் ஒருஜாமமுமாட்டி கொத்துமல்லியளவுகுளிகைசெய்து, குளிகையொன்றை, தேன், முலைப்பாலில் தாக்க மாந்த ரோகங்கள் யாவும்நீங்கும்.

## வில்வாதிமாத்திரை.

| | |
|---|---|
| பச்சைகற்பூரம் | வால்மிளகு |
| இலவங்கம் | சிறுநாகப்பூ |

| | |
|---|---|
| சீரகம் | சடாமாஞ்சி |
| கடுகுருரோகணி | சுக்கு |
| ஏலம் | ஆலிப்பருப்பு |

இவைகளைச்சமன்கொண்டு பொற்றலையின் சாற்றால் நாலுஜாமமாட்டி ஒன்பதாநாள் மிளகளவு குளிகைசெய்து தேன்முலைப்பாலில்தாக்க நாட்பட்ட மாந்தசுரம், முதலிய வைபோம்.

## இரசச்செந்தூரமாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இரச்சசெந்தூரம் பலம் | | வ | சுக்கு | விராக | வ |
| கடுக்காய் | ,, | வ | மிளகு | ,, | வ |
| தான்றிக்காய் | ,, | வ | திப்பிலி | ,, | வ |
| நெல்லிக்காய் | ,, | வ | குங்குமப்பூ | ,, | வ |
| ஏலம் | ,, | வ | கஸ்தூரி | ,, | வ |
| லவுங்கம் | விராகனிடை | க | கோரோசனை | ,, | வ |

இவைகளைக் கருநொச்சிச்சாறுவிட்டு ஒருஜாமமாட்டி சிறுபயறளவு குளிகைசெய்து துளசிச்சாற்றிலிட வயிறுப் பல், மாந்தம் முதலியவை நீங்கும்.

## பாலசஞ்சீவிமாத்திரை.

| | | | | |
|---|---|---|---|---|
| வெண்காரம் | கழஞ்சி | ௩ | கொள்ளுக்காய் | ... ௩ |
| துத்தம் | ,, | ௩ | வேளை | |
| கோரோசனை | ,, | ௩ | கடுகுரோகணி | |

இவைகளை அகத்தியிலைச் சாற்றால் ஒருஜாமமாட்டி சிறுபயறளவு உருண்டைசெய்து ஜாபத்திரிசூரணத்திலும், பனைவெல்லத்திலும், வெந்நீரிலும் கொள்ள கணமாந்தம், வயிற்றுளைவு, சன்னிசுரம் முதலியவைநீங்கும்.

## இராமபாணக்குளிகை.

| | |
|---|---|
| மஞ்சள் | சுக்கு |
| ஜாதிக்காய் | மிளகு |

திப்பிலி
இலவங்கம்
கடுகுரோகணி
மரமஞ்சள்
நாபி

இவைகளைச்சமன்கொண்டு சூரணித்து எலுமிச்சம் பழச்சாறுவிட்டு நாலுஜாமம் விடாமலாட்டிப் பயறளவு குளிகைசெய்து தேன் முலைப்பாலில்கொள்ள சகல சுரங்களும், சன்னிமுதலியதும் நீங்கும்.

## ஏலாதிமாத்திரை.

ஏலம்
மாசிக்காய்
திப்பிலி
கோரோசனை
கோஷ்டம்
மாஞ்சில்
சிரகம்
கருஞ்சிரகம்
அக்கிராகாரம்

இவைகள்வகைக்கு பலம் கால் பொன்வறுப்பாக்கிச் சூரணித்து முலைப்பாலில் கொடுக்ககணைக்காச்சல் நீங்கும்.

## இருமலுக்குச்சூரணம்.

கண்டங்கத்திரிவிரை, அமுக்கரா, திப்பிலி இவைகளைச்சமன்கொண்டு சூரணித்து ஆவின்பாலில் பிட்டுவைத்து உலர்த்தி சினி சமன்சேர்த்து திரிகடிப்பிரமாணம் ம-நாள் இருவேளைகொள்ள வாத்திசுரம், இருமல், ஈளைமுதலியதும் நீங்கும்.

## சஞ்சீவிகுளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாபி | கழஞ்சி | க | சுக்கு | கழஞ்சி | க |
| கருநாபி | ... | க | தான்றிக்காய் | ... | க |
| வாலாசம் | ... | க | மிளகு | ... | க |
| கெந்தி | ... | க | திப்பிலி | ... | க |
| வெண்காரம் | ... | க | வாளம் | ... | ௫ |

இவைகளைக் கையாந்தகரைச்சாற்ருல் நாளொன்றுக்கு ஒருஜாமமாக எ-நாள்ஆட்டி குன்றியளவு உருண்டைசெய்து குளிகை ஒன்றை ஜாதிக்காய்ச்சூரணத்தில் கொள்ள மூலவாய்வும், சிறுநீரில்பற்பலவாய்வுகளும், எலுமிச்சம் பழச்சாற்றில் விஷங்களும் நொச்சிச்சாற்றில் மூலம், வலி குன்மமும், முருங்கப்பட்டைச்சாற்றில் சூலை ரோகமும், வெண்மரிப்பாலில் க்ஷயரோகங்களும், மருதான்றிச்சாற்றில் ஐவகைப் பிரமியமும், விளக்கெண்ணெயில் மலச்சிக்கிலும், சீந்தில்சற்றிலிட எரிகுன்மமும் நீங்கும்.

## பேதிமாத்திரைகள்.

(1) சுத்திசெய்தவாளம் பலம்-க, சுக்குத்தூள் பலம் க, லிங்கம் விராகனிடை-க, இவைகளைக் கல்வத்திலிட்டு வெட்டியால் ந-ஜாமமாட்டி சிறுசுண்டைக்காயளவு குளிகைசெய்யவும். அநுபானம் சர்க்கரை.

(2) சுத்திசெய்தவாளம் பலம்-ரு-கடுக்காய்த்தோல் பன்னீர்ப்பூ, இந்துப்பு, ரோகணி, சுக்கு, வெடியுப்பு, வகைக்கு பலம் உ, கல்வத்திலிட்டு நிலாவாரைக் கியாழத்தில் ச-ஜாமமாட்டி சிறுசுண்டைக்காயளவு குளிகைசெய்யவும். அநுபானம் நிலாவாரைக்கியாழம்.

(3) மிளகு, சுத்திசெய்தவாளம் சமன்கொண்டு சோற்றுப்பு இரட்டிசேர்த்து மலைத்தேனுலாட்டிப் புளியங்கொட்டையளவு குளிகைசெய்யவும். அநுபானம் சீனி.

(4) முத்துக்கொட்டை பலம்-க, சுக்கு பலம்-உ, மிளகு பலம்-க, வெடியுப்பு பலம்-வ, சுத்திசெய்தவாளம் பலம்-ந, கல்வத்திலிட்டு மலைத்தேனுலாட்டி பட்டாணிபிரமாணம் குளிகைசெய்யவும், அநுபானம் சீனி.

(5) மிளகு, சுக்கு, திப்பிலி, சீரகமும், ஓமம், ரோகணி, கூர்மத்தோடு, கோஷ்டம், வகைக்குப்பலம்-க, முத்து

க்கொட்டை பலம்-உ, சுத்திசெய்தவாளம், பலம்-௫, இவைகளை சம்பழச்சாற்ருலாட்டி, பட்டாணிவீதம் குளிகைசெய்யவும். அநுபானம்-சீரகச்சூரணம்.

(6) சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசி வகைக்குப் பலம்-க, வாளம் பலம்-௫, லிங்கம் விராகனிடை-க, பூரம் விராகனிடை-உ, இவைகளைக் கல்வத்திலிட்டு, சம்பழச்சாற்ருல் அ-ஜாமமரைத்து சிறியபட்டாணிவீதம் குளிகைசெய்யவும். அநுபானம்-சீனி.

(7) வாளம், இரசபற்பம், இரசச்செந்தூரம், பூரம், வகைக்குப் பலம்-க, மிளகு பலம்-உ, இவைகளை நிம்பழச்சாற்ருல் உ-ஜாமமாட்டி சிறியபட்டாணியளவு குளிகைசெய்யவும். அநுபானம்-மிளகுசூரணம்.

---

குழந்தைகள்வாகடம்

முற்றிற்று.

# எண்ணெய்வகைப்படலம்.

## ஜாதிக்காய் எண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜாதிக்காய் | விராகனி | உ | செவ்வியம் | விராகனி | உ |
| ஜாதிபத்திரி | ... | உ | பேராத்தை | ... | உ |
| ஏலம் ... | ... | உ | பொற்கடுக்காய் | ... | உ |
| கோஷ்டம் | ... | உ | தான்றிக்காய் | ... | உ |
| அதிவிடையம் | ... | உ | மாசிக்காய் | ... | உ |
| குங்குமப்பூ | ... | உ | நற்சீரகம் | ... | உ |
| அதிமதுரம் | ... | உ | வால்மிளகு | ... | உ |
| கண்டுபாரங்கி | ... | உ | குராசானிஓமம் | ... | உ |
| சித்திரமூலம் | ... | உ | சதகுப்பி | ... | உ |
| சுக்கு ... | ... | உ | வசம்பு | ... | ௬ |
| ஓமம் ... | ... | ரு | | | |

மேற்கண்ட சரக்குகளை சூரணித்து

| | |
|---|---|
| ஈயத்தண்டு | நாவற்கொழுந்து |
| பழம்பாசி | விடத்தாரி |
| இலைக்கொழுந்து | கருவேலம் |
| நுணா | சங்கிலை |
| கெச்சக்காயிலை | கொட்டைகாந்தை |
| கிலுகிலுப்பை | சடைச்சி |
| குதிரைவாலி | சிறுபுள்ளடி |
| கண்டங்கத்திரி | ஜோகி |
| செருப்படை | துளசி |
| கோழிஅவரை | தும்பை |
| ஆடாதோடை | பொடுதலை |
| வல்லாரை | வேளை |
| தவசிமுருங்கை | வரப்பூலா |

இவைகளை வகைக்கு இலைச்சாறு படி அரைக்கால் விளக்கெண்ணெய் படி·க, ஒன்றாய்க்கலந்து ஸ்தன்னியப் பால் கால்ஆழாக்கு சேர்த்து, திருநீற்றுப்பத்திரிவேரும்,

கரிவேப்பிலை ஈர்க்கு, நறுக்கிக் கூடப்போட்டுப் பதமாய்க் காய்ச்சி உச்சிகரண்டிவீதம் கொடுக்க கணம், மாந்தம், சீர், மேகம், கிரந்தி முதலியவை நீங்கும்.

## கொதிப்புகணத்திற்கு எண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிற்றாமணக்கு | படி | ௧ | ஈருள்ளிச்சாறு | படி | வ |
| சம்பழச்சாறு | ... | வ | கருஞ்சீரகம் | பலம் | வ |
| இலந்தைச்சாறு | ... | வ | கற்றாழைச்சோறு | ... | ௧ |

கருஞ்சீரகத்தைப் பொடித்துப்போட்டு எழுதரம் சுத்திசெய்த கற்றாழைச்சோற்றை மேற்கண்ட பலம்விட்டு எல்லாம் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி கற்றாழைச்சிவந்த சமையத்தில் காய்ச்சி இறக்கி உச்சிக்கரண்டிவீதம் அந்திசந்திகொடுக்க, கொதிப்புகணம், ௰௮ - கணைச்சூடு, அத்திசுரம், அஸ்திவெட்டை, மேகவகை, பித்தவெட்டை, முதலியவை போகும், இவ்வெண்ணெய் குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் உதவும்.

## மாந்தப்பொருமலுக்கு எண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விளக்கெண்ணெய் | படி | ௨ | துளசி சாறு | படி | வ |
| பேய்மிரட்டிச்சாறு | ... | வ | துத்திசாறு | ... | வ |
| பொடுதலைசாறு | ... | வ | அகத்தியிலை | ... | வ |
| வேலிசாறு | ... | வ | பச்சைமஞ்சள் | ... | வீசம் |

இவைகளையெல்லாம் சேர்த்து கலக்கி ஓமம், சுட்ட ஆமையோடு, உள்ளி, வசம்பு, வகைக்குப்பலம்-வ இடித்து ஷை எண்ணெயில் ஒருகாசெடை எடுத்து வெள்ளாடம் பணவெடை பொரித்துப்போட்டு, பெருங்காயம் பணவெடை இழைத்து கலந்துகொடுக்க, முதல்நாள் பேதி அதிகமாகக்கிளறி மறுநாள் முதற்கொண்டு பொருமல், சந்நிமாந்தம் முதலியவை நீங்கும்.

## எரிகணத்திற்கு எண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| பழம்பாசிச்சாறு படி | உ | குமரிவேர்படி காலேரிக்கா | |
| தென்னங்குறும்பைச்சாறு | வ | நுணுசாறு ... | ... |
| உள்ளிச்சாறுபடி காலேரிக்கா | | எள்ளெண்ணெய் படி | க |

இவைகளை ஒன்றுபடுத்தி ஏலம், இலவங்கபட்டை, கோஷ்டம், நற்சீரகம், சந்தனம், மதுரம் வகைக்கு கழஞ்சி உ, பொடித்துப்போட்டு எண்ணெயைக் கடுகுபதத்திற்கா ய்ச்சி இறக்கி வடிகட்டி காசெடை உள்ளுக்குக் கொடுக்க வும்.

## மூக்குக்கணத்திற்கு எண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எள்ளெண்ணெய் நாழி | | க | குமரிச்சாறு | படி | வ |
| குழந்தைப்பால் | படி | வ | கண்ணிச்சாறு | ... | வ |
| நிம்பழச்சாறு | ... | வ | வில்வம் | பலம் | க |
| விஷ்ணுகாந்தி | பலம் | க | விலாமிச்சு | ... | க |
| கோரைக்கிழங்கு | ... | க | ஓரிலைத்தாமரை | ... | க |
| துளசிவித்து | ... | க | முருங்கைவித்து | ... | க |
| கோஷ்டம் | ... | க | கோங்கு பிசின் | ... | க |
| மதுரம் | ... | க | ஆவாரைபிசின் | ... | க |
| தாளிசம் | ... | க | அக்கிராகாரம் | ... | க |

மேல்சொன்ன சாறுவகைகளை மின்னிட்டு ஒன்றாய்க் கலக்கி மற்றவகைகளை வறுத்துப்பொடித்து ஷை எண்ணெ யிற்போட்டுக் கடுகுபதமாகக்காய்ச்சி காசெடை உள்ளு க்குக்கொடுத்து இண்டந்தண்டை ஊதிநறுக்கி சீரகத்தைப் பொடித்துப்போட்டு தண்ணீர்படி-வ-வார்த்து எட்டிலொ ன்றாகக்காய்ச்சி கியாழமாய் வார்க்கவும்,

## உலர்ந்த தேகத்திற்கும் பதினெட்டுகெண்ம் வெட்டைசுரத்திற்கு எண்ணெய்.

| | | |
|---|---|---|
| எள்ளெண்ணெய் படி | க | கற்றாழைச்சோறுதேங்காயளவு |

இவைகளை ஒன்றாய்க்கலந்து வெந்தயம் ஒருகாசெடை பொடித்துப்போட்டு அதனுடன் ஈருள்ளி பலம்-க அரிந்து சேர்த்து அடுப்பேற்றி மெழுகுபதமாகக்காய்ச்சி ஒரு உச்சி கரண்டிவீதம் கொடுக்கவும்.

## தோஷம் கூ, மாந்தம் கூ, டிஅ-கணத்திற்கும் எண்ணெய்.

ஈயத்தண்டு
தூதுவளை
சங்கங்குப்பி
உத்தாமணி
பூவரசு
குப்பைமேனி
ஆடாதோடை
சத்திசாரணை
பூலா
நரிபயற்றன்
பிரமி
வேளை
கற்றாழை

இவைகளின்வேர் சமன்கொண்டு இடித்துப் பிழிந்த சாறுபடி-க, விளக்கெண்ணெய் படி-உ ஒன்றுபடுத்தி,

கருஞ்சீரகம்
ஓமம்
பூண்டு
ஜாதிக்காய்
கோரோஜனை
சண்பகம்
வசம்பு
தான்றிக்காய்

இவைகளை வகைக்குப்பலம்-வ பொடித்து ஷை எண்ணெயிற்கலக்கி பதமாய்க்காய்ச்சி வடித்திறக்கி உச்சிக்கரண்டிவீதம் கொடுக்கவும்.

## மாந்தகோடாரி எண்ணெய்.

ஆடுதின்னாப்பாளை
நல்வேளை
துளசி
மணித்தக்காளி
கழற்சி
நீலி

இவைகளை வகைக்கு இலைச்சாறுபடி அரைக்கால் ஆவின்நெய்படி-வ ஒன்றுசேர்த்து கஸ்தூரிமஞ்சள், கோஷ்

டம், கருஞ்சீரகம், கடுகுரோகணி வகைக்கு விராகனிடை க, பொடித்துப்போட்டு கடுகுபதமாகக்காய்ச்சி வடிசெய்து அந்திசந்தி காசெடை உள்ளுக்குத்தாக்க சகலமாந்த வகைகளுந்நீங்கி நல்ல இரத்தம்பாவி குளிர்ச்சிதந்து குழந்தைதேகம் புஷ்டியுண்டாம்.

## தேங்காய் எண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | விராகனிடை | க | கருஞ்சீரகம் | விராகனிடை | க |
| கஸ்தூரிமஞ்சள் | ... | க | கடுக்காய்த்தோல் | ... | க |
| கார்போக அரிசி | ... | க | நீரடிமுத்து | .. | க |

இவைகளை ஊமத்தைக்காயிற்குள்வைத்து சீலைசெய்து காய்மாத்திரம் வேகும்பதமாய்ப் புடமிட்டுப் பின் காய்க்கு உள்ளிருக்கும் சரக்குகளை காயவைத்து இடித்துச் சூரணித்து தேங்காயெண்ணெயால் நன்காட்டி, ஆழாக்குத் தேங்காயெண்ணெயில் கலக்கி மூன்றுநாள் சூரியபுடம்வைத்து எடுத்து சொரிசிரங்கு, கரப்பான், இவைகளுக்கு மேற்பூச நீங்கும்.

## மாந்தத்திற்கு நல்லெண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எள்ளெண்ணெய்படி | ... | உ | சீரகம் | பலம் | க |
| மருட்கிழங்கு | பலம் | க | ரோகணி | ... | க |
| உள்ளி | ... | க | விளங்கம் | ... | க |

இவைகளை ஆவின்பாலாலாட்டி ஷை எண்ணெயிற்கரைத்து நிம்பழச்சாறுபடி-வ சேர்த்து பதமாய்க்காய்ச்சி வடிசெய்து இரண்டுகாசெடை உள்ளுக்குக்கொடுக்க மாந்தம்கணம் முதலியவை நீங்கும்.

## சூரியபுட நல்லெண்ணெய்.

| | |
|---|---|
| சிறுபுள்ளடியிலை | அவுரி |
| கழல்கொழுந்து | பொடுதலை |

வகைக்குப்பிடி-க சையகறுக்கி ஆழாக்கு நல்லெண்ணெயிற்போட்டு சூரியபுடம்வைத்து உள்ளுக்குக்கொடுத்து மேலும்பூச கணமாந்தம் போம்.

## சன்னிசுரத்திற்கு வேப்பெண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| வேப்பெண்ணெய்படி | உ | பாவட்டைச்சார் படி | ஜ |
| சங்கிலைச்சார் படி... | ஜ | முசுமுட்டை ... | ஜ |

ஷை எண்ணெயிற்சேர்த்து

| | | | |
|---|---|---|---|
| சுக்கு விராகனி | க | மிளகு விராகனி | க |
| திப்பிலி ... | க | நற்சீரகம் ... | க |
| வசம்பு ... | க | கருஞ்சீரகம்... | க |
| பூண்டு ... | க | கஸ்தூரிமஞ்சள் | க |

மேல்கண்டவகைகளை பொடித்துப்போட்டு மெழுகுபதமாகக்காய்ச்சிவடிசெய்து துட்டெடைகொடுக்க சன்னி, சுரம், கபம், மாந்தம், முதலியதும் நீங்கும்.

## ௰அ கரப்பானுக்கு எண்ணெய்.

| | |
|---|---|
| பூவரசு | கண்டங்கத்திரி |
| செங்கத்தாரி | நிலாவாகை |

இவைகளைவகைக்கு விராகன் ௰ நறுக்கிக்கியாழமிட்டு

| | |
|---|---|
| மிளகு | பரங்கிப்பட்டை |
| சதகுப்பி | கார்போகஅரிசி |
| வசம்பு | கடுகு |
| வலம்புரிக்காய் | சீரகம் |
| வெள்ளருள்ளி | |

இவைகளைவகைக்குக் கழஞ்சி உ கொண்டு சூரணித்து முலைப்பாலலாட்டி ஷை கியாழத்தில் கரைத்து வேறும் தனத்தின்பால் படி-வ விட்டு விளக்கெண்ணெய் படிசேர்த்து மெழுகுபதமாகக்காய்ச்சி வடிசெய்து உச்சிக்கரண்டி.

வீதம் உள்ளுக்குக்கொடுத்து மேலும்பூச காப்பன் மஅ, மாந்தம், கணம் மஅ-ம் போகும்.

## மேகவியாதிகளுக்கு நிலக்கடம்பை எண்ணெய்.

| | |
|---|---|
| விளக்கெண்ணெய் படி க | நுணா |
| நிலக்கடம்பையிலை | குப்பி |
| சங்கிலை | கோழிஅவரை |
| சங்கங்குப்பி | வெண்காயம் |
| சிறுசின்னி | |

இவைகளின் சாறுவகைக்கு படி அரைக்கால் கழுதை விட்டைப்பால் புங்கம்வேர் சீனிப்பால் வகைக்குப் படி அரைக்கால்சேர்த்து பச்சைசெங்கத்தாரிப்பட்டை இத்தி மூலவேர்பட்டை வகைக்குபலம் வ, ஆவின்பாலிலரைத்து கூட்டிப்போட்டு மந்திபட்டிவேர் பரங்கிச்சக்கை கார்போக அரிசி வெட்பாலையரிசி வகைக்கு பலம் வ சூரணித்து ஷை எண்ணெயிலொன்றுபடுத்தி கடுகுபதத்தில் காய்ச்சியிறக்கி வடிகட்டி ஜாதிலிங்கம் விராகனிடை க ஆர்க்கப்பொடித்துப்போட்டு உச்சிக்கரண்டி ஒன்றுவீதம் எ நாள் சாப்பிட மேகப்படை, மேகத்தடிப்பு, மேகச்சொரி, சிரங்கு, மேக வாய்வு, சூதகவாய்வு, கட்டி, புண், கிரந்தி, நுணாக்கிரந்தி முதலியவை நீங்கும். பத்தியம் இறைச்சி, கத்திரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, வண்டைக்காய், அவரை, துவரை, ஓலைவாளைக்கருவாடு முதலியவை.ஆகும், சுட்டபுளி வறுத்தவுப்பு கூட்டவும் நெய் தாளிதத்துக்காம்.

## மேகத்தினலிளைத்தவர்களுக்கு நல்லெண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| நல்லெண்ணெய் படி | ஒ | தேங்காய்பால் படி | ஒ |
| பொடுதலைச்சாறு | ஒ | வெந்தியம் பலம் | உஒ |

ஊறவைத்து ஷை பாலில்விட்டரைத்து பனைவெட்டு, பலம் உஒ சேர்த்துகரைத்து ஷை எண்ணெயுடன் கலந்து

காய்ச்சி பதத்திலிறக்கி கடுகுடன் வைத்துக்கொண்டு அந்தி சந்தி பாக்களவு கடுகும் தின்று உச்சிக்கரண்டியளவு என்ணெயும் சாப்பிட்டுவர மேகச்சூடு, மேகவாய்வு, சொரி கைகாலசதி முதலியவை நீங்கும். பத்தியம் புளி, புகை, புலால் நீக்கி நெய்,தாளிதத்திற் சேர்க்கவும், மிளகாய்க்கும் பதில் மிளகும், புளிக்கு பதில் எலுமிச்சம்பழமும் சேர்க்கலாம் மறுபத்தியமான பிறகு ஸ்நாநஞ்செய்யவும்

## குளிர்ச்சிக்கு எண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| ஓரிலைத்தாமரைச்சாறுபடி | ௨ | கற்றாழைச்சோறு படி | ௨ |
| ஈரவெங்காயச்சாறு ... | ௨ | வெந்தயம் ... | ௨ |
| எலுமிச்சம்சாறு ... | ௨ | | |

இவைகளை விளக்கெண்ணெய் படி-௧-ல் அரைத்துக் கரைத்துக்காய்ச்சி பதத்தில்வடித்து கரண்டியளவு சாப்பிட உஷ்ணகாந்தம், மேகச்சூடு முதலியவைபோகும் இச் சாபத்தியம்.

## மண்டைகுடைச்சலுக்கு எண்ணெய்.

| | |
|---|---|
| மணித்தக்காளி | கீழாநெல்லி |
| பொன்னாங்கண்ணி | வில்வம் |
| கரிசலாங்கண்ணி | |

இந்த ஐந்து நிறுசும் இடித்து ஆழாக்கு சார்பிழிந்து ஆழாக்கு நல்லெண்ணெய்கூடவிட்டு கடுகுபதமாய்க் காய்ச்சியிறக்கி ௩-நாள் வட்டமாக ௫-தலைமுழுக்குமுழுகவேண்டியது ஒவ்வொரு முழுக்கிற்கும் கடுக்கமிளகுநீர் அரை ஆழாக்கு குடிக்கவேண்டியது, பகலில் நித்திரைசெய்யவேண்டியது, அன்னியபதார்த்தம் ஆகாது, ஐந்துமுழுக்கில் மண்டைகுடைச்சல் தீரும்.

## காதில்சீழ்வடிதலுக்கு எண்ணெய்.

லிங்கம் துட்டிடை, பூரம் துட்டிடையெடுத்து பொடித்து ஒருபலம் நல்லெண்ணெய் அடுப்பில்வைத்து காயந்த பிறகு ஷை தூளைபோட்டு காயுருவிச்சார் காலணாவெடை விட்டு சற்றுநேரம்காய்ச்சியிறக்கிக்கொண்டு பஞ்சியில்தொட்டு காதில் ௩-துளி பிழிந்தால் சீழ்வருதல்தீரும்.

## சித்தாதி எண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சித்தாமணக்கு | சேர் | உ | காட்டெருமைப்பால்பலம் | | வ |
| தேங்காய்பால் | .... | உ | வேலிப்பருத்திச்சாறு | சேர் | உ |
| காயம் | விரகனிடை | உ | இந்துப்பு | பலம் | வ |
| வாளம் | பலம் | க | கடுஞ்சீரகம் | ... | வ |
| உள்ளி | ... | வ | அரிசிதிப்பிலி | ... | வ |
| கடுக்காய் | ... | க | | | |

இவையெல்லாம் எண்ணெயில்தூள்பொடிசெய்துபோட்டு காச்சி பதத்தில் வடிக்கவும் இதற்கு தீரும்வியாதி கவுசை பயித்தியம் சூலை ஆம்பல்கட்டி கல்லடைப்பு மலக்கட்டு பெரும்பாண்டு நாவடைப்பு கிரந்தி சிலவிஷக்கடிகண்ணெரிவு வாய்புண்ணு இவையெல்லாம்தீரும்.

## தினவுக்குப்பூச எண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| இரசம் விராகனிடை | க | கெந்தகம் விராகனிடை | க |

இது இரண்டையும் கல்வத்திலிட்டு துளசிச்சாறு விட்டு அரைத்து அதின்பிறகு எண்ணெயைசேர்த்து அரைத்து உடம்பில் பூசத்தீரும்.

## கண்டமாலைக்கு எண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| நல்லெண்ணெய்படி | உ௰ | பொரிகாரம் பலம் | வ |
| நெல்லிக்காய்கெந்தகம் பல | உ௰ | | |

கொடிவேலிவேர் இடித்து தேங்காயளவு எடுத்துக் கொண்டு பொரிகாரத்தைப்பொரித்துப்போட்டு இந்தமருந் துமூன்றும் எண்ணெயில் கலந்து சத்தேகொதிக்கவைத்து எடுத்துக்கொண்டு புண்ணிலேயும்பூசி உள்ளுக்கு காசளவு கொடுக்கவும் உப்பு புளி புகையிலைதள்ளி சடு நாளைக்கு ப த்தியமாய் இருக்கவேண்டும் கண்டமாலைக்கு வெகுசஞ்சீவி

## அறக்கெண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அறக்கு | பலம் | ௧௨ | கோரைக்கிழங்கு | பலம் | ௨ |
| அழுக்குறுவேர் | ... | ௧௨ | செம்பஞைக்கட்டை | ... | ௨ |
| சித்திரமுட்டிவேர் | ... | ௧௨ | நன்னாரிவேர் | ... | ௨ |
| வெருகங்கிழங்கு | ... | ௧௨ | | | |

இந்தவரைக்கும் நாலுமரக்கால் தண்ணீர்விட்டு குரு ணியாகக்காய்ச்சி வடிகொண்டு தயிருந் தண்ணீர் மூக்குறு ணி கூடவிட்டு நல்லெண்ணெய் படி ௭ விட்டுக்கடைசர க்கு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சித்தரத்தை | பலம் | ௨ | கடுகுரோகணி | பலம் | ௨ |
| வாய்விளங்கம் | ... | ௨ | சதகுப்பை | ... | ௨ |
| கோஷ்டம் | ... | ௨ | அதிமதுரம் | ... | ௨ |
| செஞ்சந்தனம் | ... | ௨ | விலாமிச்சம்வேர் | | ௨ |
| மரமஞ்சள் | ... | ௨ | | | |

தயிரும்தண்ணீர் வார்த்து சரக்கை அரைத்து எண் ணெய்யில்கூடப்போட்டு பதத்தில் வடித்துக்கொள்ளவும்.

| | | | | |
|---|---|---|---|---|
| குங்குமப்பூ | விராகனிடை | ௨ | பச்சகற்பூரம் விராகனி | ௨ |
| கோரோசனம் | ... | ௨ | | |

ஷை எண்ணெயில் கலந்து முழுகவும் இதற்கு தீரும் வியாதி நாலாமுறை மூன்றுமுறை ஈளைசுரங்கள் அதிசாரம் இதுமுதலான சுரங்களெல்லாம் தீரும்.

எண்ணெய்வகைப்படலம் முற்றிற்று.